## அமைதிக்கான அடிப்படைக் கொள்கை

அறிஞர்கள் அமைதியைப் பற்றி இவ்வாறு கூறுகிறார்கள்: “வன்முறையற்ற நிலையே அமைதி” இந்தக் கருத்து சரியே! உண்மையில் வன்முறை அல்லது போர் இல்லாத நிலையே அமைதியாகும். இருப்பினும் சிலரது பார்வையில் அமைதியை பற்றிய மேற்கூறப்பட்ட விளக்கம் அவ்வளவு திருப்திகரமாக இல்லை. அவர்களின் கருத்துப்படி அமைதியுடன் நீதியும் கூடியிருக்க வேண்டும். நீதியில்லாத அமைதி முழுமையான அமைதியாக இருக்க இயலாது. ஆனால் “நீதி வழங்கு, அமைதி ஏற்படும்” என்ற குரலோடு உலகெங்கிலும் உள்ள மக்கள் நீதியின் பெயரால் நியாயமற்ற முறையில் வன்முறையில் ஈடுபடுகிறார்கள். என்னைப் பொறுத்த வரை இது போன்ற சூழ்நிலைகளை ஏற்படுத்தி அமைதியை பெற முனைவது சாத்தியமற்றது என்றே கூறுவேன்.

இது ஏனென்றால் அமைதியானது சுயமாக நீதியைக் கொண்டு வந்து விடாது. அதாவது நீதி என்பது அமைதியின் ஒரு அங்கமல்ல, மக்கள் நீதியின் பெயரால் வன்முறையில் ஈடுபடும் போது அமைதி ஏற்படுவதற்கே வாய்ப்பில்லாமல் போய் விடக் கூடும்.

இது ஏனென்றால் வன்முறையை அடிப்படையாகக் கொண்ட சூழ்நிலையில் ஆக்கபூர்வமான விஷயங்களை ஒரு போதும் உருவாக்க இயலாது. அமைதியானது தன்னளவிலேயே தேவையுள்ளதாக அமைந்திருக்கிறது. மற்றவையெல்லாம் அதன் பிறகு தான். அமைதியுடன் சேர்ந்தே அல்ல. மக்கள் சகிப்புத்தன்மை உடையவர்களாகவும், அமைதியை அடையும் பொருட்டு அமைதியை ஒப்புக் கொள்ளக் கூடியவர்களாக இருக்கும்பட்சத்தில் உண்மையில் மக்களுக்கு புதிய வாய்ப்புகள் திறக்கப்படுகின்றன. அவை மக்கள் தங்களது நோக்கத்தை அடைந்து கொள்வதற்கான வாய்ப்புகளையும் அதற்கான சூழ்நிலைகளையும் ஏற்படுத்துகின்றன. அதனால் அமைதி கிடைப்பதோடு வாழ்க்கையின் முக்கியமான நோக்கமும் நிறைவேறுகின்றது, மேலும் அதுவே ஆக்கபூர்வமான பல்வேறு செயல்பாடுகளுக்கும் வித்திடுகின்றது.

அமைதியானது தன்னளவிலேயே தேவையுள்ளதாக இருக்கிறது. மற்றவை யெல்லாம் அதன் பிறகு தான், அமைதியுடன் சேர்ந்து அல்ல

இதற்கு ஜப்பானை ஒரு வெற்றிகரமான முன்னுதாரணமாகக் கொள்ளலாம். 1945ல் ஹிரோஷிமா மற்றும் நாகசாகி என்ற இரண்டு பெரும் தொழில் நகரங்கள் அணுகுண்டு மூலம் அழிக்கப்பட்டன. அந்த பேரழிவிற்குப் பிறகு ஜப்பான் நாடு வன்முறையை கையில் எடுக்காமல் அதற்கு பதிலாக தனது வளர்ச்சிப் பணிகளுக்காக அமைதியை ஆயுதமாக எடுத்துக் கொண்டது. அதன் விளைவு, மிகக் குறைந்த 40 ஆண்டுகால கட்டத்திலேயே ஜப்பான் உலகின் மிகப்பெரிய பொருளாதார வல்லரசாக உருவெடுத்தது. நீண்ட கால ஆயுத போராட்டத்தால் சாதிக்க இயலாத ஒரு வெற்றியை, அமைதியின் பொருட்டால் மிகக் குறைந்த காலத்திலேயே சாதிக்க முடிந்தது. “பிரச்சினையை கண்டுக் கொள்ளாமல், இருக்கின்ற வாய்ப்புகளை பயன்படுத்திக் கொள்ளுவது தான்” அமைதியைப் பெறுவதற்கான ஒரே சூத்திரம்:

பிரச்சனையை கண்டுகொள் ளாமல், இருக்கின்ற வாய்ப்புகளை பயன்படுத்திக் கொள்ளவும்

மேலும் இதே வழிமுறை தான் இஸ்லாமிய மார்க்கத்திலும் கூறப்பட்டுள்ளது. ஹுதைபியா உடன்படிக்கையின் போது முஹம்மத் நபி அவர்கள் இந்த வழிமுறையை கடைப்பிடித்ததன் மூலம் தான் வெற்றியடைந்தார்கள்..

(மேலும் தகவல்களுக்கு உலக மக்கள் அனைவருக்குமான இறைத்தூதர் முஹம்மத் (ஸல்) என்ற ஆங்கில நூலை வாசிக்கவும்)

## அமைதி எதிர்மறையை நேர்மறையாக்கும்

அமைதி என்பது ஓர் ஆக்கபூர்வமான மன ஆளுமையின் வெளிப்பாடு. வன்முறை அதற்கு எதிர்மறையான மனோ நிலையின் வெளிப்பாடாகும். அமைதி என்பது ஒரு சமூகத்தின் இயல்பான செய்கை, ஆனால் வன்முறை இயற்கைக்கு மாறான தன்மை. அமைதி என்பது இயற்கையின் செயல்திட்டம், ஆனால் வன்முறை அதற்கு எதிர்மறை. ஒரு சமுதாயத்தில் அமைதியான சூழல் நிலவும்போது அதன் அனைத்து செயல்களும் சரியான முறையில் நடைபெறும். ஆனால் அமைதிக்கான சூழல் பாதிக்கப்பட்டு விடும் போது சமுதாயத்தின் அன்றாட செயல்பாடுகளும் கூட பாதிப்படைந்து விடும். இந்த இயற்கை விதி மனிதனுக்கு மட்டும் அல்ல, மாறாக முழு பிரபஞ்சமும் இதே விதியின் அடிப்படையில் தான் அமைந்திருக்கிறது.

வன்முறை அமைதி ஏற்படுவதற்கு வேண்டிய நடவடிக்கைகளின் வாசல்களை அடைத்து விடுகிறது மாறாக அமைதி அவை அனைத்தையும் திறந்து வைக்கிறது. அந்த அமைதி தனி மனிதன், சமுதாயம் மற்றும் நாடு முழுவதும் நல்வாழ்வு வாழ்வதற்கான சூழ்நிலையை உருவாக்குகிறது. அமைதியான சூழலில் தான் எல்லா வகையான சாதனைகளும் உருவாக முடியும். வன்முறைகள் நல்ல சந்தர்ப்பங்களை இழக்க செய்யும். அமைதியானது மனிதனின் ஆக்கபூர்வமான திறமைகளை வளர்த்து, மேம்படுத்தி அதற்குத் தேவையான சூழ்நிலைகளை உருவாக்குகிறது.

## அமைதி எதிர்மறையை நேர்மறையாக்கும்

ஜெர்மானிய நாட்டைச் சேர்ந்த நிபுணர் அல்ஃபெரட் அட்லர் கூற்றின்படி, மனிதனிடம் உள்ள தனித்தன்மை எதுவென்றால் அது “எதிர்மறையை நேர்மறையாக்கும் ஆற்றல் தான்”. சாதனைகளை நிகழ்த்தக் கூடிய ஆற்றலை மனிதன் பெற்றிருப்பது எதனால்? என்ற கேள்வியை எழுப்பினால் நிச்சயமாக அமைதியின் மூலமாகத்தான். மனித மூளை அளவிட முடியாத ஆற்றல்களின் புதையல். நெருக்கடியான சந்தர்ப்பங்களில் மன நிம்மதி இழக்கும் போது மனிதன் ஆக்கபூர்வமாக சிந்திக்கும் திறனை இழந்து விடுகின்றான். எதிர்மறை சிந்தனைகள் மனித வளர்ச்சிக்கு எதிரானது. ஆனால் நேர்மறை சிந்தனைகள் மனித ஆற்றலை தூண்டி விடக் கூடியது. ஆகவே அமைதியை எந்நேரமும் தக்க வைத்துக் கொள்ளும் தனி மனிதனோ அல்லது நாடோ தான் சாதனைகளை நிகழ்த்துவதற்கான வாய்ப்புகளை பெறுகிறது. எதிர்மறை சிந்தனை, நேர்மறை சிந்தனையாக மாற்றப்படும் போது தான் இந்த மாற்றம் ஏற்படும்.

## இயற்கை – அமைதியான முன் மாதிரி

இயற்கையின் நெறிமுறைகளில் இருந்து நாம் விலகி செல்லுதலே இன்றைய உலகின் பெரும்பாலான பிரச்சனைகளின் அடிப்படைக் காரணமாக உள்ளது. இயற்கையில் அழகாகப் பின்பற்றத்தக்க முன்னுதாரணத்தை காணலாம். நாம் எதிர் நோக்கும் எல்லா குழப்பங்களும் நாம் இயற்கையை புரிந்துக் கொள்ளாததால் வருவதே ஆகும். இன்று நாம் சந்தித்துக் கொண்டிருக்கும் அனைத்து பிரச்சனைகளுக்கான காரணம் நாம் இயற்கையைப் பின்பற்றாமல் இருப்பதேயாகும்.

உதாரணமாக நட்சத்திரங்களும் கோள்களும் தன் வட்டப் பாதையில் தொடர்ந்து இயங்கிக் கொண்டு இருக்கின்றன. ஆனால் அவைகள் என்றும் ஒன்றுடோன்று மோதியதில்லை. மனிதனும் அவ்வாறு தனது வாழ்வின் சரியான இலக்கைப் புரிந்து கொண்டு யாரிடமும் சச்சரவில் ஈடுபடாமலிருக்க இயற்கையின் இந்த அமைப்பு முன்னுதாரணமாக அமைந்திருக்கிறது என்று கூறலாம். சூரியன் கூட மிகச் சரியான முன் மாதிரி தான். எந்த வித பாகுபடும் இன்றி முழுமையாக எவ்வாறு சேவை செய்வது என்பதை காட்டுகிறது. மரம் கூட அது போன்றதே, கார்பன்டைஆக்சைடு என்னும் விஷ வாயுவை பெற்றுக் கொண்டு நாம் சுவாசிக்கும் பிராண வாயு,

வன்முறை அமைதி ஏற்படுவதற்கு வேண்டிய நடவடிக்கைகளின் வாசல்களை அடைத்து விடுகிறது; மாறாக அமைதி அவை அனைத்தையும் திறந்து வைக்கிறது

ஆக்சிஜனை நமக்கு வழங்குகிறது. நாம் அதை புகழ்கிறோமா இல்லையா என்பதைக் குறித்து கவலைப்படாமல் பூக்கள் தன்னைச் சுற்றி நறுமணத்தை பரப்புகிறது இல்லையா? அமைதியாக ஓடிவரும் நீரோடை கூட நமக்கு ஒரு முன் மாதிரி தான், எந்த வித எதிர்ப்பார்ப்பும் இன்றி நிலத்தில் நீர் பாய்ச்சி அதனை வளப்படுத்துகிறது. பொது நலம் பாராமல் செய்யும் இத்தகைய நல்ல மதிப்புகளை நாம் மனதில் பதிய வைத்துக் கொண்டால் தான் வாழ்க்கை அர்த்தமுடையதாகத் திகழும்.

> சிறந்த வாழ்க்கைக்கு அமைதி மிகவும் இன்றியமையாதது. தனி மனித அமைதி, குடும்ப அமைதி மற்றும் அமைதியான சுற்றுப்புற சூழல் அனைத்தும் மிக இன்றியமையாதது.

இறைவனால் படைக்கப்பட்ட இந்த அழகான பூமி மனிதனால் அழிக்கப்பட்டு வருகிறது. பரவலான வன்முறை, சுற்றுப்புறச் சூழல் பாதிக்கப்படுதல், புவி வெப்பமாகுதல் என இவை அனைத்தும் 3வது உலகப் போரை விட மிகப் பெரும் அச்சுறுத்தலை ஏற்படுத்தியுள்ளது. 3வது உலகப் போர் ஏற்கனவே திணிக்கப்பட்டுள்ளதை போல் தெரிகிறது. மனிதச் சமுதாயம் எதிர்க் கொள்ளும் மிகப் பெரிய சவால் இது தான், மனித குல நன்மைக்காக நாம் அனைவரும் ஒற்றுமையாகவும், உளமாரவும் இயற்கையை பாதுகாப்போம். இவை அனைத்தும் அமைதியின் வழியிலேயே அடைய முடியும்.

## அமைதி பெற வழி

சிறந்த வாழ்க்கைக்கு அமைதி மிகவும் இன்றியமையாதது. தனி மனித அமைதி, குடும்ப அமைதி மற்றும் அமைதியான சுற்றுப்புறச் சூழல் அனைத்தும் மிக இன்றியமையாதது. வாழ்வில் மாற்ற இயலாத ஒன்றாக இருப்பது மனிதர் களுக்கு மத்தியில் நிலவும் கருத்து வேறுபாடு மட்டுமே. சமூக வேறுபாடுகளை களைவதே அமைதியை கொண்டு வருவதற்கான ஒரே வழி என்பது சிலரது கருத்தாகும். இது நிலை நிறுத்த முடியாத, நடைமுறையில் சாத்தியமற்ற கோணம். ரோஜாவுடன் எப்பொழுதும் முள் இருக்கவே செய்யும். அதற்காக அந்த செடியில் உள்ள எல்லா முட்களையும் கிள்ளி எறிந்து விட முடியுமா என்ன? அதற்காக ரோஜாக்களில் முட்களே இல்லாமல் செய்வது உங்களால் இயலாத ஒன்று. ஒன்றை பிடுங்கி எறியும் போது, வேறு ஒன்று அந்த இடத்தில் முளைத்து விடும். அந்த பூந்தோட்டத்தில் புல்டோசரைக் கொண்டு எல்லா ரோஜா செடியின் மீது ஏவி விட்டாலும் முளைக்கின்ற ரோஜாவோடு முள் இருக்கவே செய்யும். இயற்கையின் நியதியின் படி முள்ளும் மலரும் சேர்ந்தே தோன்றும், இதை நாம் சகித்தே ஆக வேண்டும். அதைப் போலவே சமுதாயங்களுக்கு மத்தியில் காணப்படும் வேற்றுமைகளை அனுசரிப்பதன் மூலம் மட்டுமே ஒரு அமைதியான சமுதாயத்தை ஏற்படுத்த இயலும்.

மனிதன் தன் வரம்பை உணர்ந்தால் மட்டுமே இவ்வகையான அமைதியான வாழ்வை அடைய முடியும். இறைவனின் விதிப்படி மனிதன் தனது தேவைக்காக எதற்கும் ஆசைப்படலாம், ஆனால் பேராசைப்படக் கூடாது. நீங்கள் மற்றவர்களோடு இணைந்து தொழில் செய்யலாம். ஆனால் அவர்களை சுரண்டக் கூடாது. நமது தனித் தன்மையை நாம் பாதுகாத்துக் கொள்ளலாம். ஆனால் அதற்கு விலை ஒரு குடும்பமாகவோ அல்லது சமுதாயமாகவோ இருக்கக் கூடாது. அமைதிக்கான ஒரே வழிமுறை இது தான் : உங்களுடைய உரிமையை பெற்றுக் கொள்ளுங்கள் ஆனால் மற்றவரின் உரிமைக்கு பாதிப்பு ஏற்படாதவாறு. மற்றவர்களின் தேவைகளை பறித்து விடாமல் உங்களுடைய தேவைகளை பூர்த்தி செய்துக் கொள்ளுங்கள். மற்றவர்களுடைய எதிர்ப்பார்ப்புகளுக்கு ஏமாற்றத்தை ஏற்படுத்தாமல் உங்களுடைய எதிர்ப்பார்ப்புகளை பூர்த்தி செய்யுங்கள், உங்களுடைய இலட்சியத்தை நிறைவேற்றுங்கள், மற்றவர்க்கான உரிமையை விட்டுவிடுங்கள் சுருக்கமாக, உங்களுடன் இருக்கும் சக உயிரினங்களுக்கு எவ்வித தொந்தரவும் கொடுக்காமல் உங்கள் பிரச்சனைகளை நீங்களே தீர்த்துக் கொள்ளுங்கள். அமைதியான ஒருங்கிணைந்த வாழ்வே இவ்வுலகில் அர்த்தமுள்ளதாகும்.

> அமைதிக்கான ஒரே வழிமுறை இதுவே : உங்களுடைய உரிமையை பெற்றுக் கொள்ளுங்கள். ஆனால் மற்றவரின் உரிமைக்கு பாதிப்பு ஏற்படாதவாறு; மற்றவர்களின் நலன்களை பறித்து விடாமல் உங்கள் தேவைகளை பூர்த்தி செய்துக் கொள்ளுங்கள்

**- மவுலானா வஹிதுத்தீன் கான்**


For more information, contact :

TL 01

GOODWORD

324, Triplicane High Road,
Chennai - 600 005.
☎ +91-44-4352 4599
+91 97908 53944
✉ chennaigoodword@gmail.com

goodwordbooks.com

1, Nizamuddin West Market,
New Delhi - 110 013.
✉ info@goodwordbooks.com

www.alquranmission.org • www.wkhan.net
www.alrisala.org • www.cpsglobal.org

CPS International
centre for peace & spirituality


# அமைதிக்கான அடிப்படைக் கொள்கை



Ideology of Peace (Tamil)